13th September 1958]

SRI. M. KALYANASUNDARAM : மேகங்கள் திரளக்கூடிய இடங்களில், அவை மழையாகப் பெய்யக்கூடிய நேரத்தில், பெய்யக்கூடிய அளவிற்கு மழை பெய்யச் செய்வது தான் இந்த முறை என்பது வாஸ்தவம். ஆனால், நீலகிரி மலையில் மட்டும் தான் மேகங்கள் திரளக்கூடுமா ? சேலத்திலுள்ள சேர்வராயன் மலையில் வருடத்தில் 4–5 மாதங்களில் மேகங்கள் திரண்டுவிட்டு மறைகின்றன. அங்கே இந்தப் பரிசோதனைகளை நடத்த வேண்டுமென்று அக் கமிட்டி கூறியிருக்கிறதா ? அங்கே பரிசோதனைகள் நடத்தப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நம் மாநிலத்தில் பல இடங்களில் மலைகள் இருக்கின்றன. அங்கே மேகங்களும் கூடுகின்றன. ஆனால் ஏதாவது ஒரு இடத்தில் தான் பரிசோதனைகளை நடத்த விரும்புகிறோம். மேலும் கோயம்புத்தூரில் வாநிலை அறிவிப்பு அலுவலகம் (மெடியரலாஜிஸ்ட் அலுவலகம்) இருக்கிறது. இப்போது பரிசோதனைகள் தான் நடத்தப்படுகின்றன. பரிசோதனைகளின் முடிவுகள் தெரிந்த பிறகு மற்ற பிரதேசங்களிலும் இந்த முறையைக் கையாளலாம்.

*Irrigation*

* 187 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லாவிலே விசேஷ நீர்ப்பாசன திட்டங்களுக்கென 1958-59-ம் ஆண்டுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு ?

(ஆ) இத் தொகை மூலமாக தாலூகாவாரியாக என்னென்ன திட்டங்கள் நிறைவேற்றப்படும் ?

THE HON SRI M. BHAKTAVATSALAM : (*a*) Rs. 1,02,500.

(*b*)

| Taluk. (1) | Name of schemes. (2) |
|---|---|
| Palladam .. .. .. | (1) Restoration of Kannanpalayam tank. |
| Gobichettipalayam .. | (2) Extension of ayacut under sluice No. 428 of Thadapalle channel. |
| Pollachi .. .. .. | (3) Providing irrigation facilities to the lands on the left side of Aliyar river. |

SRI P. G. MANICKAM : விசேஷ சிறு பாசனத் திட்டங்களுக்காக இந்திய சர்க்கார் ராஜ்ய சர்க்காருக்கு போதிய பணம் கொடுக்கத் திட்டமிட்டுக்கொண்டிருக்கிறது. ஆகவே, கோயம்புத்தூர் ஜில்லாவில் என்னென்ன சிறு பாசனத் திட்டங்களை நிறைவேற்றமுடியுமோ அவைகளையெல்லாம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்ப்பதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த விஷயம் இப்போது தீவிரமாகக் கவனிக்கப்பட்டுத் தான் வருகிறது.

*Bone digesters*

* 193 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சூப்பர்பாஸ்பேட், போன்மில் போன்ற தானிய விளைவை அதிகரிக்கக்கூடிய உரத்தை உற்பத்தி செய்யக்கூடிய போன் டைஜெஸ்டர்கள் (bone digesters) இந்த மாகாணத்தில் இருக்கிறதா ? அப்படியானால், அவைகள் எங்கிருக்கின்றன ?